நா. திருநாவுக்கரசு

# பழநியப்பர் வாழ்க்கை வரலாறு






பேராசிரியர், டாக்டர்

ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.

எழுதியது.



திருநாவுக்கரசு வித்தியாசாலை,

நேமத்தான்பட்டி.

திருநாவுக்கரசர் வித்தியாசாலை வளம்பெற ஓங்கலாயிற்று. இடம் போதாததாகவே கீழ்த்திசையில் மாளிகையுடன் கட்டிடங்கள் கட்டப்பட்டன. ஆதியில் ஓராசிரியருடனும், முப்பத்தொரு சிறுவர் சிறுமியருடனும் துவங்கிய கல்லூரி இப்போது எட்டாவது வரை பன்னிரண்டு வகுப்புக்களை யுடையதாய் பதினான்கு ஆசிரிய ஆசிரியைகளுடனும் 212 மாணவர்களுடனும், 143 மாணவிகளுடனும் அறிவுச் சுடர் ஒளியாய் மிளிர்கின்றது. பழநியப்பர் இக்கலாசாலைக்காக இலட்சக்கணக்கான ரூபாய்கள் செலவு செய்துள்ளார். வித்தியாசாலை ஆண்டு விழாக்களில் இளமை உள்ளம் படைத்த பழநியப்பர் காலையிலெழுந்து நீராடிக் கதராடை புனைந்து, ஐந்து முகத்தவனை அடிபணிந்து ஆறு மணிக்கே விழா மண்டபம் செல்வார். வருகின்ற அன்பர்களை வரவேற்று உபசரித்த வண்ணமாய் இருப்பார். பள்ளிக்கூடப் பிள்ளைகள் அகமகிழ்ந்து ஆடிப்பாடிச் சபையை மகிழ்விக்கும் பொழுது பழநியப்பர் கருணையோடு அவர்களை நோக்கிக் களித்திருப்பார். தேவாரத் திருப்பாசுரங்களைக் குழந்தைகள் மழலை மொழியால் இசைக்கும்பொழுது கருணையுள்ளம் வாய்ந்த பழநியப்பர் மாறிலா இன்பத்தில் மகிழ்ந்திருப்பார். அரும் பெரும் புலவர்கள், சபையில் பேசும் பொழுது அன்னார் உணர்ச்சியில் ஈடுபட்டு இன்புற்றிருப்பார். இத்தகைய பெரியார் பழநியப்பர் சுபானு ஆண்டு சித்திரைத் திங்கள் 14ஆம் நாள் 27-4-43 செவ்வாய்க்கிழமை இரவு 11-55க்கு சிவ சிவ என்னும் மறைமொழி உரைத்தவாறே சிவன் சேவடியினைச் சேர்ந்தார். ஆயினும் அவர்கள் தோன்றாத் துணையாக நின்று திருநாவுக்கரசு வித்தியாசாலையையும், மற்றைய அற நிலையங்களையும் பாதுகாக்கின்றார் என்பதுறுதி.

வாழிய அறங்கள் வாழ்க உலகெலாம்.



3-04

# முன்னுரை

பாண்டி நாட்டில் உள்ள நேமத்தான்பட்டியில் வாழ்ந்த பெரியார் பழநியப்ப செட்டியார். அவர் மாசற்ற மனத்தினர்; பண்பார்ந்த மொழியினர்; சிவநெறியையும் தமிழ் மொழியையும் இரு கண்ணெனக் கருதிய சீலர்; திருநாவுக்கரசர் பெயரைத் திருமந்திரமாகக் கொண்டவர். 'நல்லார் குணங்கள் உரைப்பது நன்று' என்று பெரியோர் கூறினராதலின் பழநியப்பரது வாழ்க்கை வரலாற்றின் சுருக்கத்தை உரிமைபற்றி எழுதலுற்றேன்.

—ரா. பி. சேதுப்பிள்ளை.

20—4—44.

உ

சிவமயம்

# பழநியப்பர்

# வாழ்க்கை வரலாறு

பன்னுதொல் புகழ் பாண்டி நன்னுட்டிடை ஒளிறும் நேமத்தான்பட்டி என்னும் மூதூரில் சைவத் தனவணிகர் குலத்தில், வடிவுடையம்மை வளரொளிநாதர் அடி தொழும் வைரவன் கோவில் தெய்வ விநாயகர் வகுப்புப் பெரிய வீரப்பர் பெருங்குடியில் திரு. நாராயணன் செட்டியாரும் இலட்சுமி ஆச்சியும் செய்த நற்றவப் பயனுகப் பிரசோற்பத்தி ஆண்டு, மார்கழித் திங்கள், ஆரும் நாள், மங்கள வாரம், உத்திரட்டாதியில் (19—12—1871) ஒரு புதல்வன் பிறந் தார். பழநியாண்டவன் அருளால் பெற்ற அப்பிள்ளேக்குப் பழநியப்பன் எனப் பெற்ருேர் பெயரிட்டு மகிழ்ந்தனர். பழநியப்பரின் ஐந்தாவது வயதில் தாயார் சிவனடியடைந் தார். இளமையிலேயே தாயின் அன்பை இழந்து நின்ற மைந்தனைத் தந்தையாரும் பாட்டியாரும் ஆதரித்து வளர்த்து வந்தனர்.

குலத்தொழிலுக்கு வேண்டிய அளவு கல்வி கற்ற பழநியப்பர், ஒன்பதாம் வயதிலேயே "திரைகடலோடியும் திரவியம் தேடு" என்னும் மூதுரைக்கும், தனவணிகர் குல முறைக்கும் ஏற்ப மலாயா நாட்டில், பழமை வாய்ந்த மலாக்கா என்னும் ஊருக்குத் தன் தாய் மாமனுருடன் சென் ருர். சில நாளிலேயே இவர் தொழிலின் திறமையை அறிந்த பலர் தக்க சம்பளம் கொடுத்துத் தத்தம் கடைகளில் அமர்த்திக்கொள்ள முற்பட்டனர். ஆயினும் அதற்கு இவரது தாய் மாமனுர் இசைந்தாரல்லர்; தம் கடையிலேயே நல்ல ஏற்பாடு செய்து வைத்துக் கொண்டார். பின்னர் பழநியப்பர் ஊருக்கு வந்து மறுமுறை மலாக்காவுக்குத் திரும்பிச் சென்றபோது மூவாரில் கூட்டுக்கடை அமைத்தார். முதற் கணக்கிலேயே மிகுந்த ஊதியம் கிடைத்தது. பின்னர்

இராயவரம் பெருஞ் செல்வரான திரு. ப. வ. பழநியப்ப செட்டியாரவர்களின் நட்பினைப் பெற்ருர். தன்னுடைய மூவார்க் கடையுடன் அவர்களுக்கும் ஒரு கடை நடத்த ஏற்பாடு செய்துகொண்டு இரு கடைகளையும் தாமே திறம் பெற நடத்தலானுர்.

இவ்வாறு ஊக்கமாகக் குலத்தொழில் நடத்திய பழநியப்பர் மீண்டும் ஊருக்கு வந்து உண்ணுமுலையாச்சியென்னும் பெண்மணியை மணந்தார். முதலில் ஒரு பெண் மகவு பிறக்க அதற்கு இலட்சுமி என்னும் தன் அன்னையின் பெயரிட்டு மகிழ்ந்தார். அக்காலத்தில் அவரது அருமைத் தந்தையார் ஆண்டவன் திருவடி அடைந்தார். "பட்ட காலிலே படும்" என்பது போல அதற்குப் பின்பு சில நாட்களில் மனைவியாரும் காலம் சென்ருர். இருவரையும் இழந்த துயரம் ஒருவாறு மாறியவுடன், பலவான்குடி பண் பார்ந்த திரு. ப. வீர. வீரப்பச் செட்டியார் புதல்வியான விசாலாட்சி ஆச்சியைப் பழநியப்பர் மணந்தார். சில திங்களில் மலாய் நாடு சென்ருர்.

மூவார் நகரில் இவர் முருகனுக்கு வழிபாடு செய்ய எண்ணி உடனிருந்த தனவணிகப் பெருமக்களுடன் கலந்து ஆலோசித்தார். அனைவரும் அதற்கு இசைந்தனர். அப்பொழுது எதிர்பாராத வகையில் ஒருவர் மாசற்ற செப்புக் கட்டி யொன்றைக் கொண்டு வந்து "இதை விலைக்குக் கொள்வாருண்டோ?" என்று பழநியப்பரிடம் வினவினுர். பொன்போல் ஒளி வீசிய அக்கட்டியைக் கண்ட பழநியப்பர் பெருமகிழ்ச்சியுடன் "இது முருகனின் சக்திவேல் செய்ய ஆகுமே; பூசையிட வேல் வேண்டுமென எண்ணியிருக்கையில் அதற்குரிய மூலப் பொருள் தானேகிடைப்பது நல்ல அறிகுறி" என்று எண்ணினுர். "வாயானை, மனத்தானை, மனத்துள் நின்ற கருத்தானை, கருத்தறிந்து முடிப்பான் தன்னை" என்று அப்பர் அருளிய தேவாரத்தின் பொருளறிந்து திளைத்தார். செப்புக் கட்டி கொணர்ந்தவர் கேட்ட விலையைக் கொடுத்து வாங்கிப் பெட்டியில் வைத்தார். அன்று மாலையில் தட்டார வேலை பார்க்கும் தமிழ் ஆசாரி

ஒருவர் அவ்வூர் மூன்றும் தெருவில் வேலை செய்யக் கண்டார். அதற்கு முன் தட்டாரப் பணி செய்யும் தமிழரை இவர் அவ்வூரில் கண்டதில்லை. 'வேல் வடித்துக் கொடுக்க ஒருவர் இவ்வூரிலேயே கிடைத்தாரே' என்னும் மகிழ்ச்சி பொங்க, பழநியப்பர் சில நண்பர்களுடன் அவரிடம் போந்து வினவினர். வெற்றிவேல் ஆக்கிக்கொடுக்க ஆசாரியும் இசைந்து, செப்புக் கட்டியைப்பெற்று அழகான வேலாயுதம் அமைத்து அளித்தார். ஒரு நன்னாளில் மூவாரிலே அவ்வேலை நிறுவி முருகனுக்கு நகரத்தார் வழிபாடு செய்தனர்.

அன்று முதல் தனவணிகர் வாணிபம் முன்னிலும் பன்மடங்கு செழித்து வளரலாயிற்று. பழநியப்பரின் முயற்சியால் நகரப் பொதுவில் சிறியதோர் இடம் வாங்கி அங்கு முருகவேளுக்குக்கோவில் அமைத்துக் காலந்தோறும் பூசனையியற்ற நகரத்தார் ஏற்பாடு செய்தனர். நந்தவனம் வைத்தனர். பசுமடம் கட்டினர். மாலைப்பொழுதில் பழநியப்பர் நந்தவனத்திலும், பசுமடத்திலும் நாள்தோறும் தொண்டு செய்வார். காலையிலும் மாலையிலும் முருகனை வணங்கி வருவார். கோயில் வேலைகளை ஏனைய வேலைகளிலும் சிறந்த தாக எண்ணி அன்போடும் ஆர்வத்தோடும் கவனிப்பார். "இப்படிக் கோயில் வேலையே செய்து கொண்டிருந்தால் கடை வேலைகளை யார் பார்ப்பது?" என வேடிக்கையாக நண்பர்கள் வினவினல் "வேலன் காரியங்களை நாம் பார்த்தால் நம் வேலைகளை அவர் பார்த்துக்கொள்வார்; எங்கள் கடையில் ஊதியம் நன்ருகக் கிடைக்கிறதே; எல்லாம் அவனருள்!" என முக மலர்ந்து விடையளிப்பார். இங்ஙனம் கடை வேலைகளை முருகனும் கோயில் வேலைகளைப் பழநியப்பருமாகப் பார்த்து வந்தனர்.

இப்படி நிகழ்ந்து வரும் நாளில் பழநியப்பர் தமது கடையில் பதிலாள் நியமித்துவிட்டு ஊர் வந்து சேர்ந்தார். முருகனருளால் விசாலாட்சி ஆச்சிக்கு ஆண்மகவு பிறந்தது. அம் மைந்தனுக்கு நாராயணன் என்னும் தம் அருமைத் தந்தையின் பெயரை இட்டு மகிழ்ந்தார். பின்னும் சின்ன

ளிருந்து மீண்டும் மூவார் சென்றார். அப்போது இரு கடைகளும் ஒன்றாய் இணைக்கப்பட்டுப் பெருந்தொழிலாய் நடைபெற்றது. பழநியப்பரே கடையின் அதிபராய் நல்ல சம்பளம் பேசி அமர்ந்தார். ஒரு நாள் பழநியப்பர் தூய வெண்ணீறு துதைந்த மேனியராய், முருகன் சேவடியை வணங்கி வந்து தம் கடையின் முகப்பில் அமர்ந்திருந்தார். அப்போது நாதசுரம் என்னும் இசைக் கருவியில் பயிற்சி பெற்ற தமிழர் ஒருவர் அங்கு வந்தார். பழநியப்பரை வணங்கித் தாம் நாதசுரக்காரர் என அறிவித்துக் கொண்டார். "உங்களுக்குப் பக்க வாத்தியக்காரர் உண்டோ?" எனப் பழநியப்பர் வினவ, "ஆம்! ஒத்து ஊதுபவரும், தவுலடிப்பவரும், தாளக்காரரும் ஆகிய நால்வர் சேர்ந்தே வேலை தேடி வந்தோம்; இங்கு முருகனாலயத்திற்கு எங்கள் தொண்டு வேண்டியிருக்குமோ எனத் தங்களை நாடி வந்தோம்" என்றார். பழநியப்பர் நகரத்தார் கூட்டத்தில் கலந்து அதற்கு முடிவுரைப்பதாகக் கூறினார். அதுவரை காத்திருக்க இன்னிசையாளர் இசைந்தனர். நகரத்தார் முருகன் ஆலயத்திற்கு முன்பு கூடினர். பழநியப்பரும் மற்றொரு அன்பரும் முருகன் ஆலயத்தில் என்றும் மேளவாத்தியம் நடைபெறுவதற்குத் தாம் மூலதனம் கொடுப்பதாகவும், அதை நகரத்தார் ஏற்று நடத்தி வர வேண்டுமென்றும் கூறினர். அதற்கு எல்லோரும் இசையவே, பழநியப்பர் பெருமகிழ்ச்சியுடன். தமது கடையில் பெற்ற இரண்டாண்டு முன் சம்பளத்தையும், நண்பர் நற்சாந்துப்பட்டி அடைக்கலஞ் செட்டியார் அவர்களிடம் பெற்ற தொகையையும் நகரத்தாரிடம் ஒப்படைத்தார். அன்று இவர் அளித்த மூலப்பொருளால் இன்றும் முருகன் ஆலயத்தில் இன்னிசை முழங்குகின்றது.

இவர் காரியஸ்தராக இருந்த வயி. பழ. கடையிலிருந்து முருகன் ஆலயத்துக்குப் பொன்னிலும், மணியிலும், வெள்ளியிலும், பித்தளையிலும், செம்பிலும் செய்து கொடுத்த பொருள்கள் பலவாகும். மூவார் வயி. பழ, கடையில் பழநியப்பர் செய்யும் எந்த அறச் செயலுக்கும், கூட்டுக்காரர்களும், ப. வ. குடும்பத்தாரும் அன்புடன் இசைந்திருந்தனர்.

அந்நிலையில் நேமத்தான்பட்டியில் புதிய இல்லம் ஒன்று கட்ட வேண்டுமென எண்ணிப் பழநியப்பர் ஊர் வந்தார். சாதாரண ஐப்பசி 8-ஆம் நாள் நன்னாளிலே கட்டிட வேலை தொடங்கப்பெற்றது. வீடு கட்டிய பின்னர் பரிதாபி ஆவணி 11-ஆம் நாள் புது மனை புகுதல் நடை பெற்றது. அவ்வீடு "அப்பர் இல்லம்" என்னும் அருமையான பெயரைப் பெற்றது. வீட்டு வேலை நடந்துகொண்டிருக்கும் பொழுது பழநியப்பருக்கு ஓர் பெண் மகவு பிறந்தது. அதற்கு உண்ணாமுலை என்னும் முதல் மனைவியின் பெயரைச் சூட்டினர். பின்னர் மூவார் சென்றார்.

மூவாரில் மகாராணித் தெரு என்னும் ஆற்றங்கரை வீதியில் எட்டாவது எண்ணுள்ள வீட்டின் எதிரில் இராச மன்னார்குடிக் கோவிந்தசாமிப் பிள்ளை என்பவர் ஒரு சிறு சுருட்டுக் கடை வைத்திருந்தார். பழநியப்பர் அவரை அழைத்துத் தன்னுடன் இருக்கச் செய்து உணவளித்து அளவளாவினர். "சுருட்டுக் கடையைச் சுருட்டி விட்டு ஒரு பெட்டி வைத்துக்கொண்டு தொழில் நடத்தினல் நன்றாகுமே" என்று கூறினர். பணம் கொடுக்கல் வாங்கலுக்குத் தொகை உதவினர். கோவிந்தசாமிப் பிள்ளைக்கு நல்ல ஊதியம் கிடைத்தது. சிறந்த செல்வராகிவிட்டார். அவர் கோவிலுக்குப் பழநியப்பருடன் செல்வதும் ஆலயப் பணிகள் புரிவதும் வழக்கம். இந்நிலையில் இருவரும் நெருங்கிய தோழராய் விளங்கினர்.

பழநியப்பரும், கோவிந்தசாமிப் பிள்ளையும் ஊர் வந்து சேர்ந்தனர். பல நாட்களாகப் பிரியாதிருந்த இருவரும் பிரிய நேரிட்டது. கோவிந்தசாமிப் பிள்ளை மன்னார்குடி வரும்படி பழநியப்பருக்குக் கடிதம் பல வரைந்தார்; ஆயினும் இவருக்கு வாய்ப்பில்லை. "கற்றுணைப் பூட்டி ஓர் கடலிற் பாய்ச்சி"ய அப்பரைக் கரை சேர்த்து ஆட்கொண்டருளிய ஆண்டவன் வீற்றிருக்கும் திருப்பாதிரிப்புலியூர் குடமுழுக்கிற்கு மனைவி மக்களுடன் பழநியப்பர் சென்றிருந்தபோது அங்குப் போந்து கோவிந்தசாமிப் பிள்ளை அழைத்தார். 'அன்புடையார் வருக என்றழைத்தால்

வராதிருக்க வழக்குண்டோ ?' பழநியப்பர் குடும்பத்தோடு மன்னார்குடி சென்று சின்னாள் தங்கினர். அப்பொழுது அங்கு இராசகோபால சுவாமி கோவிலில் திருநாள் நடந்தமையால், காலையிலும் மாலையிலும் கண்ணன் திருவிழாக் கண்டு களித்தனர். ஒருநாள் காலையில் வெண்ணெய்த் தாழித் திருவிழா; குழந்தைக் கண்ணன் தவழ்ந்த வடிவில் அடியார்க்குக் காட்சி அளித்தார். மங்கையரெல்லாம் வெண்ணெய் வாங்கிக் கண்ணனுக்கு வழங்கினர். பழநியப்பரும் விசாலாட்சியும் அக்காட்சியைக் கண் குளிரக் கண்டார்கள். ஆச்சியின் மனத்தில் ஓர் ஆசை பூத்தது. 'கண்ணா! மணிவண்ணா! எனக்கு இன்னுமொரு ஆண் குழந்தை தர வேண்டும்; அதற்கு உன் திருநாமம் சூட்டி மகிழ்வேன்' என வேண்டினார். வேண்டுவார் வேண்டுவன அளிக்கும் ஆண்டவன் அருள் சுரந்தார். ஊர் வந்து சின்னாட் சென்றதும் ஆச்சியார் கருவுற்று ஆண் மகவு பெற்றார். அப்பிள்ளைக்குக் கிருஷ்ணன் என்னும் பெயர் இட்டுக் களித்தனர்.

மூவாரிலிருந்து பழநியப்பர் ஊர் வருவதற்கு முன்னரே நகரத்தார் முருகனுக்குப் புதியதோர் ஆலயம் கட்ட முடிவு செய்திருந்தனர். பழநியப்பர் ஆலயத் திருப்பணிக்குத் தக்க சிற்பிகளை இங்கிருந்தே அனுப்பினார். கண்ணையும் கருத்தையும் கவரும் முருகன் திருவுருவமும் இங்கிருந்தே அனுப்பப் பெற்றது, அச்சிலையை மூவார் நகர் ஆலயத்தில் நிறுவி நகரத்தார் குடமுழுக்கு நடத்தினார்கள். குடமுழுக்கு விழாவின் சிறப்பெலாம் கேட்டு உளம் குளிர்ந்தார் பழநியப்பர். பின்னர் முருகனுக்குக் கோரதம் ஒன்று செய்ய ஆசை கொண்டார். மூவாரிலிருந்து நகரத்தார் அனுப்பிய பணத்தைக் கொண்டு காரைக்குடி திரு. லெ. வீர. வீரப்பச் செட்டியார் என்னும் உயிர் நண்பர் இல்லத்தில் தேர் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டது. தேரில் உருவங்கள் பல செதுக்கப்பட்டன. கண் கவரும் வண்ணங்கள் பூசப்பட்டன. கவரி வீசும் பதுமைகள் இலங்க, அழகிய இரு குதிரைகள் விளங்க, அயன் தேர் செலுத்தும் காட்சி அடியார் அணை

வர்க்கும் இன்பம் அளித்தது. இங்ஙனம் ஆக்கப்பட்ட தேரை நாகப்பட்டினத்தின் வழியாக மூவாருக்கு அனுப்பினர். தேரோடு பழநியப்பரும் கப்பல் ஏறினர்.

தேர் மூவாரை அடைந்தது. முருகன் அழகிய கோலத்துடன் அத்தேரில் பவனி வந்தார். அத்தேரைக் கண்டமாந்தர் அனைவரும் இந்தியரின் கலைச் செல்வத்தைப் புகழ்ந்தனர்; மனமாரப் போற்றினர். இவை யாவும் கண்டு பழநியப்பர் எல்லையில்லா இன்ப மெய்தினர்.

பழநியப்பர் மூவாரடைந்த போது மக்கள் ரப்பர் விலை வீழ்ச்சியால் மனமிடிந்து நின்றனர். வாங்கிய பொருளைக் கொடுக்க முடியவில்லை. ஈட்டிய பொருளை யெல்லாம் இழக்கும்படியாயிற்று. இவ்வாறு தளர்ந்து நின்ற மக்கள் நிலை கண்டு தரியாத பழநியப்பர் தங்கள் கடையில் கொடுக்கல் வாங்கல் செய்பவரை அழைத்தார். அவரவர் வருவாயைக் கேட்டுக் குடும்பச் செலவைக் கழித்து மிகுந்திருப்பதைத் தமது வட்டிக்குத் தரும்படி கூறினர். மிச்சம் ஒன்றும் இல்லாதவர்கள் வீழ்ந்த விலை ஏறும் வரையிலும் பொருள் தரவேண்டாமென அவர் உள்ளத்தைத் தேற்றியனுப்பினர். சிலர் பெற்ற கடனுக்குச் சொத்துக்களை எழுதித் தருவதாகக் கூறினர். பழநியப்பர் அவர்களைப் பார்த்து, "சொத்துக்களை இப்போது உங்களிடமிருந்து பெற்றால் பின்னர் எங்களுக்கு மிகுந்த ஊதியம் வரும் என்பதில் ஐயமில்லை. ஆயினும், அதில் வரும் ஊதியத்தை நாங்கள் அடையும்போது உங்கள் மனம் புண்படும். ஆகவே நீங்களே அச் சொத்துக்களை விலை ஏறிய பின்னரும் அனுபவித்து இன்புறுங்கள்" என்று பழநியப்பர் கூறியபோது அவரிடம் தொழில் செய்த மக்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு ஓர் அளவில்லை. 'அங்குள்ள சீனர் சங்கங்கள் எல்லாம் "பிறர் பொருளை விரும்பாப் புண்ணியர் பழநியப்பர்!" எனப் புகழ்ந்தன.

திரு. தேபோன் என்ற சீனச் செல்வர் ஒருவர் பழநியப்பர் கடையில் தொகை வாங்கியிருந்தார்; விலை இறக்கத்தால் வருந்திய தேபோன் பழநியப்பரிடம் மன்றாடினர்.

சொத்துக்களையெல்லாம் எடுத்துக் கொண்டு தன்னைக் கடனில்லாமல் கால் வயிறு கழியும் நிலையில்விட்டால் கோடி புண்ணியம் உண்டெனக் கூறினர். சீனச் செல்வரின் சொத்துக்கள் விலையுள்ள காலத்தில் பன்மடங்கு அதிக மான விலைக்கு விற்கத்தக்கன. ஆயினும் பழநியப்பர் உள் ளம் மகிழ்ந்தாரல்லர். சீனச் செல்வரைப் பார்த்து, "ஐயா! உம்முடைய சொத்தில் ஒரு சிறிதும் எனக்கு ஆசையில்லை. விலை ஏறும் வரையில் எனக்கு ஒரு காசும் நீர் தரவேண் டாம். பொருளெல்லாம் சிறிது விலை ஏறின் உங்களுக்குரிய தாகிவிடும். கவலைப்படவேண்டாம்" எனத் தேற்றி யனுப் பினர். ஒன்றரை ஆண்டுகள் சென்றன; அதற்குள் பருவ விலை ஏறி நாடு நலமடைந்தது. தன் கையிலிருந்த ஒரு சொத்தை விற்றுவந்த பெரும் பொருளால் தேபோன் பழநியப்பரின் கடனைத் தீர்த்தார். பின்னும் பொருள் மிஞ்சியது கண்டு பழநியப்பரை நெஞ்சங் குளிர வாழ்த்திச் சென்றார். இங்ஙனம் மலாயா, சீன தேச மக்களுக்குக் காலத்தாற் செய்த உதவிகள் கணக்கிறந்தன. உற்றார் சிலருக்கு எந்தவிதமான முதலும் வாங்காமல் கடைகள் வைத்துக் கொடுத்து வந்த வருமான மெல்லாம் அவருக்கே பழநியப்பர் உதவியிருக்கிறார். வேறு சிலருக்கு வைத்துக் கொடுத்த கடைகளில் நட்டம் நேரிட, அக் கடைகளுக்குத் தன் கைப்பொருளைக் கொடுத்து ஈடு செய்துள்ளார். பழநி யப்பர் தன்னை யடைந்தவரை வாழ்விக்கும் பண்புடையவர்.

வயி. பழ. கடையிலிருந்து மணியும் கோபுர விளக்கும் மூவார் கோயிலில் பழநியப்பர் அமைத்தார். தன் பொரு ளில் விராலிமலை, மேலூரிலுள்ள குல தெய்வத்தின் கோயில், புதூருணிப் பிள்ளையார் கோயில், இவைகளில் மணிகள் அமைத்துள்ளார். விராலிமலைக் கோயில், பெரிய கோயில் சுவாமிகளுக்குச் செய்த தங்க அங்கிக்குப் பணம் உதவி யுள்ளார்.

மூவாரிலுள்ள அரசியலாரின் உயர்தரக் கல்லூரியில் இலங்கையைச் சேர்ந்த திரு. பொன்னம்பலனர் என்பவர்

ஆசிரியராய் அமர்ந்திருந்தார். பழநியப்பருக்கும் பொன் னம்பலனாருக்கும் நட்பு ஏற்பட்டது. இருவர் நட்பும் வளர் பிறைபோல் வளர்ந்து வந்தது. அந்நாளில் ஒரு சித்திரைத் திருவாதிரையில் பொன்னம்பலனார் பொருள் சொல்லப் பெரிய புராணம் தொடங்கப் பெற்றது. ஓராண்டளவும் சிவ நேசச் செல்வராய பொன்னம்பலனாரின் இனிமையான விரி வுரை நடந்தது. சேக்கிழாரின் செந்தமிழின்பத்தையும், பத்திச் சுவையையும், பொன்னம்பலனார் வாக்காற் கேட்டுப் பழநியப்பரும், நகரத்தாரும், மூவார் மக்களும் அடைந்த இன்பத்திற்கு அளவில்லை. ஓராண்டு அந்நகர மக்கள் பழநியப்பரின் அறச் செயலால் இலக்கியப் பெருவிருந்து உண்டு மாறிலா மகிழ்ச்சியில் திளைத்தனர். பெரிய புராணச் சொற்பொழிவுகள் நடைபெறுங்கால் ஒவ்வொரு நாளும் சிற்றுண்டி வழங்கப்பெறும். சுந்தரர் திருமணம், சம்பந்தர் பெருமணம் முதலியன நடைபெறும் நாட்களில் பேருண்டி அளிக்கப்பெறும். காரைக்காலம்மையார் புராணத்தன்று மாம்பழம் வழங்கப்பெறும். இவ்வாறாக ஆண்டு முழுதும் திருத்தொண்டர் திருநாள் சிறப்பாகக் கொண்டாடப்பட் டது. முடிவு நாளன்று பொன்னம்பலனாருக்குப் பழநியப்பர் நல்ல பட்டாடையும், பணமும் வழங்கிப் புகழ்ந்து போற்றி னார்.

மூவாரிலிருந்து பழநியப்பர் தனது உயிர் நண்பர், காரைக்குடி, திரு. லெ.வீர. வீரப்பச் செட்டியாருடன் ஊருக் குப் புறப்பட்டார். நாகப்பட்டினம் வந்து இருவரும் திருமறைக்காட்டினை அடைந்தனர். ஆங்கு வீரப்பச் செட்டியாரால் மேலவீதியில் நிறுவப்பட்டிருந்த தண்ணீர்ப் பந்தல் தருமத்திற்குப் பாதிப் பங்கீந்தார் பழநியப்பர். பின்னர் இருபத்தையாயிரம் ரூபாய்க்கு மேல் செலவு செய்து இருவர் உதவியாலும் கட்டிடம் கட்டப்பெற்றது. அதற்குத் "திருநாவுக்கரசர் தண்ணீர்ப் பந்தலெ"னப் பெயரிட்டு அறத்தினைப் போற்றி வளர்த்து வந்தார். ஊர் வந்த சின்னாளில் ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்து முத்து என்னும் பேரிட்டு மகிழ்ந்தனர்.

இவர் தனக்குரிய பங்கீந்து புது ஊருணிப் பிள்ளையார் கோவிலைப் புதுக்கிக் குடமுழுக்கு விழா நடத்தினர். உள்ளூர் அறுபத்து மூவர் குருபூசை மடத்தில் ஐந்தில் இருபங்கு பழநியப்பருக்குண்டு.

நேமத்தான்பட்டிச் சிறுவர் சிறுமியர்க்குக் கல்வியை முறையாகக் கற்பிக்க விழைந்து திருநாவுக்கரசர் வித்தியா சாலையை, அட்சய ஆண்டு புரட்டாசித் திங்கள், நான்காம் நாள் (20.9.1926) ஒரு சிறு கட்டிடத்தில் நிறுவினர். நாள் தோறும் அக்கலாசாலை வளர்மதியென வளர்ந்தது. கலாசாலைக்கு இடம் போதாததாயிற்று. ஆதலால் பெரிய ஊருணியின் வடகரையில் பரந்ததோர் இடத்தை வாங்கினர். பெரிய கட்டிடங்கள் ஆங்கு எழுந்தன. விபவ ஆண்டு ஆவணித் திங்கள் அக்கட்டிடத்தில் நான்கு வகுப்புக்கள் ஆரம்பிக்கப்பெற்றன. விளையாடுமிடங்கள், வாகீசர் வாசக சாலை, திருநாவுக்கரசர் நூல் நிலையம், அப்பர் இசைஅரங்கு, அரிச்சந்திரச் சாரணர் படை, மருணீக்கியார் இன்னியக் குழு, திருநாவுக்கரசர் தண்ணீர்ப் பந்தல், விசாலாட்சி சங்கம், திருவள்ளுவர் தொழில் நிலையம் முதலியன அமைக்கப் பெற்றன. பழநியப்பருடன் அவர்கள் குடும்பத்தினரனைவரும் ஒன்றுபட்டு அப்பர் பணி புரியலாயினர்.

பிரசோற்பத்தி ஆண்டு மார்கழித் திங்கள் ௩ஆம் நாள் (18-12-1931) உத்திரட்டாதி நன்னாளில் பழநியப்பருக்கும் விசாலாட்சியன்னையாருக்கும் அப்பரில்லத்தில் மணி விழா நிகழ்ந்தது. உற்றூர் உறவினர்களுக்குப் புத்தாடை வழங்கினர். நண்பர், உறவினர், பள்ளிக் குழந்தைகளுக்கு நல் விருந்தளித்தனர். இரவு பெரிய கோவிலில் ஐம்பெருங் கடவுளர் திருவுலாக் காட்சி நல்கினர். இப்படியாகச் சிறந்த முறையில் மணிவிழா நடைபெற்றது. தன் மனைவியார் விசாலாட்சி ஆச்சியின் பெயரால் ரூபாய் முப்பத்து மூவாயிரம் செலவு செய்து சுந்தரர் தெருவில் விசாலாட்சி ஊருணியும் சுந்தரப்பிள்ளையார் கோவிலும் அமைத்தார். 26-10-39ல் ஊருணித் திறப்புவிழாவும் கோவில் குடமுழுக்கும் சிறப்பாக நடத்தினர்.

திருநாவுக்கரசர் வித்தியாசாலை வளம்பெற ஓங்க லாயிற்று. இடம் போதாததாகவே கீழ்த்திசையில் மாளிகை யுடன் கட்டிடங்கள் கட்டப்பட்டன. ஆதியில் ஓராசிரியருட னும், முப்பத்தொரு சிறுவர் சிறுமியருடனும் துவங்கிய கல் லூரி இப்போது எட்டாவது வரை பன்னிரண்டு வகுப்புக் களை யுடையதாய் பதினான்கு ஆசிரிய ஆசிரியைகளுடனும் 212 மாணவர்களுடனும், 143 மாணவிகளுடனும் அறிவுச் சுடர் ஒளியாய் மிளிர்கின்றது. பழநியப்பர் இக்கலாசாலைக் காக இலட்சக்கணக்கான ரூபாய்கள் செலவு செய்துள்ளார். வித்தியாசாலை ஆண்டு விழாக்களில் இளமை உள்ளம் படைத்த பழநியப்பர் காலையிலெழுந்து நீராடிக் கதராடை புனைந்து, ஐந்து முகத்தவனை அடிபணிந்து ஆறு மணிக்கே விழா மண்டபம் செல்வார். வருகின்ற அன்பர்களை வர வேற்று உபசரித்த வண்ணமாய் இருப்பார். பள்ளிக்கூடப் பிள்ளைகள் அகமகிழ்ந்து ஆடிப்பாடிச் சபையை மகிழ்விக்கும் பொழுது பழநியப்பர் கருணையோடு அவர்களை நோக்கிக் களித்திருப்பார். தேவாரத் திருப்பாசுரங்களைக் குழந்தை கள் மழலை மொழியால் இசைக்கும்பொழுது கருணையுள்ளம் வாய்ந்த பழநியப்பர் மாறிலா இன்பத்தில் மகிழ்ந் திருப்பார். அரும் பெரும் புலவர்கள், சபையில் பேசும் பொழுது அன்னார் உணர்ச்சியில் ஈடுபட்டு இன்புற் றிருப்பார். இத்தகைய பெரியார் பழநியப்பர் சுபானு ஆண்டு சித்திரைத் திங்கள் 14ஆம் நாள் 27-4-43 செவ்வாய்க்கிழமை இரவு 11.55க்கு சிவ சிவ என்னும் மறைமொழி உரைத்தவாறே சிவன் சேவடியினைச் சேர்ந்தார். ஆயினும் அவர்கள் தோன்றாத் துணையாக நின்று திருநாவுக்கரசு வித்தியாசாலையையும், மற்றைய அற நிலையங்களையும் பாதுகாக்கின்றார் என்பதுறுதி.

வாழிய அறங்கள் வாழ்க உலகெலாம்.

